20th January 1961]

பெற்றிருந்தும் இதுவரை நடவடிக்கை ஏதும் எடுத்துக் கொள்ளாததேன் ?

(இ) எப்போது இந்த வேலை துவக்கப்படும் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) & (*b*) : The estimate for constructing a bridge across Valavanar at mile 6/7 of Gopalasamudram-Voimedu road has been finalised and it is under scrutiny. Sanction will be accorded to the estimate, and the work will be taken up for execution soon.

SRI A. VEDARATHNAM : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கு முதல் உரிமை வழங்கப்பட்டிருந்தும் இவ்வளவு கால தாமதம் ஆனதற்கு ஏதாவது காரணம் சொல்ல முடியுமா ? அதற்கு எஸ்டிமேட் தொகை எவ்வளவு ? இந்த வேலை எப்போது பூர்த்தியாகும் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதற்குக் காரணம் இப்போது சொல்வதற்கில்லை. எஸ்டிமேட் எழுபதாயிரம் ரூபாய். வெகு துரிதமாக அந்த வேலை துவங்கப்படும் என்று சொல்லியிருக்கிறது.

*Aid to Herbalists*

*9 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மூலிகை வைத்தியம் செய்பவர்களுக்கு உதவி அளிக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : ஸார். . . .

MR. SPEAKER : கனம் மந்திரி அவர்கள் " நோ " என்று சொல்கிறபோது தாங்கள் என்ன கேட்கப் போகிறீர்கள் ?

SRI S. M. ANNAMALAI : கிராமப்புறங்களில் இப்படிப்பட்ட மூலிகையைப் பயன்படுத்தி சில வைத்தியர்கள் நோய்களைத் தீர்க்கிறார்கள். அந்த மூலிகை வைத்தியர்களுக்கு உதவி செய்யவாவது சர்க்கார் முன்வரக்கூடாதா ? அப்படி உதவி செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த மூலிகைகளை நன்றாக வளர்ப்பதற்கு இந்திய மருத்துவக் கல்லூரியில் ஏற்பாடு செய்திருக்கிறோம். மற்ற இடங்களிலும் வளர்ப்பதற்கு இடம் இருக்கிறது.